உ



கடவுள்துணை.

திருமூலர் திருவாய்மலர்ந்தருளிய

# வேதாந்தத்

# தத்துவக்கட்டளை.




இஃது

வ-புஷ்பரத செட்டி

அண்டு கம்பெனியாரால்

கலாரத்நாகரம்

என்னும் தமது அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னபட்டணம்.

1895.

உ

சிவமயம்.

# அறிவிப்பு.

---

இப்புத்தகம் சென்னபட்டணம் முத்தி யால்பேட்டை தம்புசெட்டியார் வீதியில் 2' கதவிலக்கமுள்ள கலாரத்நாகரம் என் அச்சுக்கூடத்தில் விற்கப்படும்.

புத்தகம் ௧-க்கு அணா - ௨.
தபாற்செலவு, ,, - ௨.

12-புத்தகங்கள் அரை அணா தபால் ( திரையில் அனுப்பக்கூடும்.

☞ இதைப்போலவே சிறு புத்தகப தெளிவுபெற நாநுசீவவாதக்கட்டளை ( லிய சில கட்டளைகளும், **வேதாந்த ப** **சேதம்** என்னும் நூலும் விரைவில் வெ யிடப்படும்.

---

சிவமயம்.

# வேதாந்தத்

# தத்துவக்கட்டளை.

## காப்பு.

தைதூாயாவாலுஞ்சார்கதியிங்காவானு
ந்தமிலாவின்பஃமக்காவானு - மெந்தமுயிா
ுகுவானுஞ்சரஞகுவானுமருட்
ாறுகுவானுங்குரு.

---

### தத்துவங்கள்—௯௬.

இவை முதற் றத்துவம் - ௩0
ரண்டாந் தத்துவம் - ௩0, மூன்றாந்
த்துவம் - ௩௬, எனப் பிரிக்கப்
ட்டு வழங்கும்.

**முதற்றத்துவம்—௫0.**

| | |
|---|---|
| பூதம் | ௫ |
| பொறி | ௫ |
| புலன் | ௫ |
| கன்மேந்திரியம் | ௫ |
| கன்மவிஷயம் | ௫ |
| கரணம் | ௪ |
| அறிவு | ௧ |
| ஆக | ௫0. |

**இரண்டாந்தத்துவம்—௫0.**

| | |
|---|---|
| நாடி | ௧0 |
| வாயு | ௧0 |
| சயங்கள் | ௫ |
| கோசம் | ௫ |
| ஆக | ௫0. |

**மூன்றாந்தத்துவம்—௫௬.**

| | |
|---|---|
| ஆதாரம் | ௬ |
| மண்டலம் | ௩ |
| மலம் | ௩ |
| தோஷம் | ௩ |

| | |
|---|---|
| ஏடணை * | ௩ |
| குணம் | ௩ |
| இராகம் | ௮ |
| வினை | ௨ |
| அவஸ்தை | ௫ |
| ஆக | ௯௬. |

---

## முதற்றத்துவம் ௩௦-ன் வரலாறு.

### பூதம்—௫.

ருதிவி = மண்
ப்பு = நீர்
தயு = அக்கினி
ாயு = காற்று
காயம் = சுத்தவெளி

### பொறி—௫.

சாத்திரம் = செவி
தாக்கு = உடம்பு

---

* ஈஷணை என்னும் இச்சைப் பொருட்
ான வடமொழியானது, விதிவழியே ஐகார
ருய் ஈடணை என நின்று மரூஉ வழக்கால்
ணை என வழங்குகின்றது.

சட்சு = கண்
சிகுவை = நாக்கு
ஆக்கிராணம் = மூக்கு

புலன்—ரு.

சத்தம் = கேட்கப் பட்டது [செவ
குயிர்க்கூறு]
பரிசம் = சுகதுக்க வறிவு [உட
குயிர்க்கூறு]
உருவம் = காணப்பட்டது [கண்
குயிர்க்கூறு]
இரசம் = அறுசுவை யறிவு [ந
குயிர்க்கூறு]
கந்தம் = நற்கந்த துர்க்கந்த வ
[நாசிக் குயிர்க்கூறு.]

கன்மேந்திரியம்—ரு.

வாக்கு = வாய்
பாதம் = கால்
பாணி = கை
பாயுரு = அபானம்
உபத்தம் = குறி.

கன்மவிஷயம்—௫.

சனம் = வார்த்தை [வாய்க் குயிர்க் கூறு]

= நடை [காலுக் குயிர்க்கூறு]

ானம = கொடுத்தல் வாங்கல் [கைக் குயிர்க்கூறு]

ிசர்க்கம் = விடுதல் [அபானத்துக் குயி ர்க்கூறு]

தம் = மகிழ்தல் [குறிக் குயிர்க்கூறு.]

கரணம்—௪.

ம் = ஒன்றை நினைப்பது

தி = ஒன்றை விசாரிப்பது

ங்காரம் = ஒன்றைக்கொண் டெழுப்புவது

தம் = ஒன்றைச் செய்து முடிப்பது.

அறிவு—௧.

றிவு = உள்ளந் தன்னைக்கண்டு மகிழ்ந்திருத்தல்.

ஆக முதற்றத்துவம் - ௩௦.

## இரண்டாந்தத்துவம் ௯0-ன் வரலாறு

நாடி—௧0.

இடை == வலதுகால் பெருவிரலினி
று கத்தரிக்கோல் ே
மாறலாக இடது நா
யைப்பற்றி நிற்பது.

பிங்கலை == இடதுகால் பெருவிரலின்
று கத்தரிக்கோல் பே
மாறலாக வலது ந
யைப்பற்றி நிற்பது.

சுழுமுனை * == மூலாதாரத்தைத் தொட
து எல்லா நாடிக்கும்
தாரமாய் நடுநாடியா
சிரசளவு முட்டிநிற்ப

சிகுவை == உண்ணாக்கிலே நின்று
று தண்ணீர் இ
விழுங்கப்பண்ணுவது

* சுஷும்நா என்னும் வடமொழி
முனை எனற்பாலது விதிகடந்து
வழக்காய்ச் சுழுமுனை என்றும், வழூஉ
காய்ச் சுழிமுனை என்றும் வழங்கும்.

| | |
|---|---|
| அருடன் | = வலது கண்ணளவாய் நிற்பது. |
| காந்தாரி | = இடது கண்ணளவாய் நிற்பது. |
| அத்தி | = வலது காதளவாய் நிற்பது |
| அலம்புடை | = இடது காதளவாய் நிற்பது |
| சங்கினி | = குறியினளவாய் நிற்பது |
| குகு | = அபானத்தளவாய் நிற்பது. |

## வாயு—க௦.

| | |
|---|---|
| பிராணன் | நாகன் |
| அபானன் | கூர்மன் |
| வியானன் | கிருகரன் |
| உதானன் | தேவதத்தன் |
| சமானன் | தனஞ்சயன். |

## இவற்றுள்:—

௧. பிராணன் = மூலாட மத்தியிற் றோன்றிச் சித்திர நாடியில் விழுந்து, ஒவ் என்று மூலாதாரத்திற் குதித்து, அவ் என்று நாபித்தானத்தில் முட்டி, சவ் என்று இடைபிங்கலைகளி லோடி, கடாலத்தைச் சுற்றி, நாசியிற் பண்ணி

ரண் டங்குலம் புறப்பட்டு, நாலங்
குலங் கழன்று எட்டங்குலம் மீண்டு
தானின்ற விடத்திற் குறுக்குறுவது
இப்படி நாழிகை ஒன்றுக்கு ௩௬0
சுவாசம் ; இரவுபகல் ௬0 - நாழிகைக்
கும் உ௧,௬00-சுவாசம்.

இந்தச் சுவாசம் உ௧,௬00-க்கும் விவரம்.

| | |
|---|---|
| மூலாதாரத்திற்குச் சுவாசம் | ௬00 |
| பிருதிவியில் சுவாதிஷ்டானம் பிரமாவினிடஞ் சுவாசம் | ௬000 |
| அப்புவின் மணிபூரகம் விஷ்ணுவினிடஞ் சுவாசம் | ௬000 |
| தேயுவில் அனுகதம் உருத்திரனிடஞ் சுவாசம் | ௬000 |
| வாயுவில் விசுத்தி மயேச்சுரனிடஞ் சுவாசம் | ௧000 |
| ஆகாசத்தி லாஞ்ஞை சதாசிவனிடஞ் சுவாசம் | ௧000 |
| நாதாந்தத்தில் தட்சிணா மூர்த்தியினிடஞ் சுவாசம் | ௧000 |

ஆக உக,சுOO - சுவாசமியங்கி, இதில் எ,உOO-சுவாசம் பாழாகப் பாய்ந்து கச,சOO - சுவாசம் உள்ளே புகும் என்று அறியவும்.

அபானன் = குதத்தையுங் குய்யத்தையும் பற்றி நின்று மல சலாதிகளைக் கழிப்பிப்பது.

வியானன் = தோலிலே நின்று பரிசங்களை அறிவிப்பது.

உதானன் = உதராக்கினியை எழுப்பி உண்ட அன்னசாரத்தை எஉ,OOO நாடி நரம்புகளிலே கலப்பித்துச் சரீரத்தை வளர்ப்பிப்பது.

ரு. சமானன் — எல்லா வாயுவையும் ஏறுதல் குறைதல் செய்யவொட்டாமற் சமனாய்க் கீழ்கொண் டியங்குவது.

சு. நாகன் = விக்கலுங் கக்கலும் உண்டாக்குவது.

எ. கூர்மன்=கண்ணிலேநின்று இமைப்பது.

அ. கிரிகரன் = புருவமத்தியத்தைப் பற்ற நின்று தும்முவித்தலும் அழுவித்த லுஞ் செய்வது.

௯. தேவதத்தன் = விழித்திருக்கும்போது ஓடுவித்தலும், உலாவுவித்தலும், உட த்தம் பண்ணுவித்தலுஞ் செய்வது.

௧0. தனஞ்சயன்=பிராணன் உடம்பை விட்டுப் போனாலும் தான் பிரியாமல் நின்று உடம்பை வீங்குவித்தலும் விரிவித்தலும், புளிப்பித்தலுஞ் செய்து, மூன்றுநாட் கப்பாற் கபாலத் தைப் பிளந் தோடிப் போவது.

சயம்—ரு.

அமர்வாசயம்
பகிர்வாசயம்
சலவாசயம்
மலவாசயம்
சுக்கிலவாசயம்.

௧. அமர்வாசயம்=உண்ட அன்னசாரம் அமரு மிடம்.

பகிர்வாசயம்=அன்னம் பகிருமிடம்.
யம்=சலக்குழி இறங்குமி[illegible]
யம்=மலக்குழி இறங்கு
வாசயம்=சுக்கிலம் பிரிய

## கோசம்—ரு.

அன்னமயகோசம்
பிராமயகோசம்
மனோமயகோசம்
விஞ்ஞானமயகோசம்
ஆனந்தமயகோசம்.

அன்னமயகோசம் = சட்பாவ விகாரமாகத் தோற்றப்பட்ட தூலதேகம்.

பிராணமயகோசம் = பிராணனும் கன்மேந்திரியமும் கூடிநிற்பது.

மனோமயகோசம் = மனதும் கன்மேந்திரியமும் கூடிநிற்பது.

விஞ்ஞானமயகோசம் = புத்தியும் ஞானேந்திரியமும் கூடிநிற்பது.

ரு. ஆனந்தமயகோசம் = பிராண வாயுவுஞ்
* சுழுத்தியுங் கூடிநிற்பது.

ஆக இரண்டாந்தத்துவம் - ௩0

---

## மூன்றாந்தத்துவம் ௩௬-ன் வரலாறு.

ஆதாரம்—௬.

மூலாதாரம்
சுவாதிஷ்டானம்
மணிபூரகம்
அனாகதம்
விசுத்தி
ஆஞ்ஞை.

க. மூலாதாரம் = நாற்சதுரத்துக் குள்ளே முக்கோணமா யிருப்பது; இதனடு வேநிற்கும் எழுத்து ஓங்காரம் இதில் நிற்குந் தேவதை விநாயகன்.

---

* ஸுஷுப்தி என்னும் வடமொழி சுழுத்தி என மருவி நின்றது.

உ. சுவாதிஷ்டானம் = நாற்கோணமாயது. இதனடுவே நிற்கும் அக்கரம் நகாரம்; அதிதேவதை பிரமா.

ங. மணிபூரகம் = பிறைக்கோண மாயது; இதனடுவேநிற்கும் எழுத்து மகாரம்; அதிதேவதை விஷ்ணு.

ச. அனுகதம்=முக்கோணமாயது; இதனடுவே நிற்கும் எழுத்துச் சிகாரம்; அதிதேவதை உருத்திரன்.

ரு. விசுத்தி=அறுகோணமாயது; இதில் நிற்கும் எழுந்து வகாரம்; அதிதேவதை மகேசுவரன்.

சு. ஆஞ்ஞை = வட்டமாயிருப்பது. இதனடுவே நிற்கும் எழுத்து யகாரம்; அதிதேவதை சதாசிவன்.

இப்படி ஆதாரம் ஆறிலேயும், ஆறெழுத்தும், ஆறு தெய்வமும், ஆறு வீடும், அதில் ஐம்பத்தோ ரக்ஷரமுங் கண்டுகொள்க.

மண்டலம்—ங.

அக்கினிமண்டலம்
ஆதித்தமண்டலம்
சந்திரமண்டலம்.

க. அக்கினிமண்டலம் = நாற்சதுரமாய் நடுவே மூன்று கோணமாய்ப் பிருதிவியும் அப்புவுங் கூடின விடத்தே நாலிதழுடைய புஷ்பமா யிருப்பது.

உ. ஆதித்தமண்டலம் = இருதய கமல அறுகோண மெட்டிதழுடைய புஷ்பமாய் வாழைப் பூப்போன்று கீழ்நோக்கி யிருப்பது.

ங. சந்திரமண்டலம் = கோடி சந்திராதித்த ருதயம் ஆனாற்போலச் சிரசு நடுவே ஓவ் என்ற அக்கரத்தை முன்னிட்டுப் பேதித்து இந்த அமிர்தகலை அக்கினி மண்டலத்தை மேனோக்கிச் சோதியாய் இதனடுவே பராசத்தி எழுந்தருளி யிருப்பது.

மலம்—௩.

ஆணவம்
காமியம்
மாயை.

௧. ஆணவம்=உடம்பை நானென் றிருக்கை.

௨. காமியம் *=கண்டதுக்கெல்லாமாசைப் படுகை.

௩. மாயை = தனக்கு வருவதை யறியாமற் கோபங்கொண் டிருக்கை.

தோஷம்—௩.

வாதம்
பித்தம்
சிலேத்துமம்.

வாதம் =வாயுவின் கோபம்.

பித்தம் =அக்கினியின்கோபம்.

---

* கார்மியம் என்னுங் கர்மசம்பந்தத்தை உணர்த்தும் வடமொழி சேபலோபப்பட்டு காமியம் என மருவிற்று.

சிலேத்துமம் * = அப்புவின்கோபம்.

இந்த மூன்றுகோபத்தால் சகலவியாதியு முண்டு.

ஏடணை—௩.

அத்தவேடணை
புத்திரவேடணை
உலகேடணை.

அத்தவேடணை = திரவியத்தைத்தேடி ஆசை ப்படுதல்.

புத்திரவேடணை = புத்திரனைத்தேடி ஆசைப் படுதல். இதை ஒழித்துக் களத்திர வேடணை என்றுங் கூறுவதுண்டு.

உலகேடணை = ஊருங்காணியுந்தேடி ஆசைப் படுதல்.

குணம்—௩.

இராசதம்
தாமதம்
சாத்துவீகம்.

---

* சிலேஷ்மம் என்னும் வடமொழி சிலேட் டுமம் எனற் பாலது, விதிகடந்து சிலேத்து மம் என மருவிற்று.

இராசதம் = அகங்காரமாய் மத்திம குணத்தனு யிருத்தல்.

தாமதம் = உன்மத்தனுய் மத்திமகுணத்தனு யிருத்தல்.

சாத்துவீகம் = யாருக்கும் நல்லவனுய் ஞானகுணத்தனு யிருத்தல்.

## இராகம்—அ.

| | |
|---|---|
| காமம | மதம |
| குரோதம் | மாற்சரியம் |
| உலோபம் | இடும்பை |
| மோகம் | அகங்காரம். |

காமம் = ஆசை.

குரோதம் = பிணக்கு.

உலோபம் = பிடிபாடு.

மோகம் = பிரியம்.

மதம் = செருவம்.

மாற்சரியம் = உறவாயும் உதட்டில் நகைப்புமாயிருந்து உட்பகை விளைவித்தல்.

இடும்பை = உதாசினம்.

அகங்காரம் = கோபித்தல்.

விீனை—உ.

நல்வினை.

தீவினை.

நல்வினை = புண்ணியஞ்செய்தல்.
தீவினை = பாவஞ்செய்தல்.

அவஸ்தை—ரு.

சாக்கிரம்
சொற்பனம்
சுழுத்தி
துரியம்
துரியாதீதம்.

சாக்கிரம் = லலாடத்தானம்.
சொப்பனம் = கண்டத்தானம்.
சுழுத்தி = இருதயகமலம்.
துரியம் = நாபீகமலம்.
துரியாதீதம் = குறியிடம்.

முன்சொல்லிய சாக்கிரமாகிய லலாடத் தானத்திற் சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம், வசனம், கமனம், தானம், விசர்க்கம்,

ஆனந்தம், மனம், புத்தி, அகங்காரம், சித்தம், இப்பதினாலு கருவிகளுடன் தன்னுடைய சந்நிதியிற் சேவிக்கத்தக்கதாகப் பராசத்தியருளாய இராசாவும் படையும்போல நிற்கும்.

இதற்குச்சாட்சி

திருமந்திரம்.

கண்டவைந்துங் கலந்தனவோரைந்து
முண்டனநான்கு மோதியுணர்ந்தபின்
பண்டையனாதி பகர்ந்தவிச்சாக்கிர
மண்டமதாக வமர்ந்திருந்தானே.

இப்பால் முன்சொன்ன பதினாலு கருவியிலே பத்துமொடுங்கிநின்ற நான்குகரணமுஞ் சொப்பனமாகிய கண்டத்தானத்தி னிற்கும் போது கனவுகண்டு மறந்துவிட்டே னென் றறியவும்.

இதற்குச்சாட்சி

திருமந்திரம்.

பண்டுமொழிந்த பதினாலுந் தன்னிலே
கண்டமதனிற் கரணங்கலந்துதான்

மண்டிவளைந்த மனைவாழ்க்கைதன்னிலே
கண்டுமெறிந்துங் கனவதுவாமே.

முன்சொன்ன கரணம் நான்கில் இரண்டு மொடுங்கி இரண்டும் வந் திருதய, கமலத்தி லே நின்றதென் றறியவும்.

இதற்குச்சாட்சி

## திருமந்திரம்.

ஆனமனமு மறிகின்றபுத்தியு
மோனையிழந்துநின் றுள்ளேயுயிர்ப்பெய்தித்
தானமிழந்து தயங்கியவாறுபோல்
ஞானமிழந்து சுழுத்தியதாமே.

துரியமாவ திரண்டி லொன்றொடுங்கி ஒன் றுபோய் நாபீகமலத்தி னிற்குமென் றறியவும்.

இதற்குச்சாட்சி

## திருமந்திரம்.

கானத்தெழுந்து திரியுந்துரியந்தான்
வானத்தெழுந்துபோய் வையம்பிராக்கித்தே
தாவுத்தெழுந்த கருத்தின்றலையிலே
பூனைத்தவிர்ந்துமங் கோங்கிநின்றானே.

---

துரியாதீதங் கெட்டவிடத்தில் ஆன்மா
மலாதாரத்திற் கிடந் துறங்குமென் றறிய
ம். முன்சொன்ன பதினாலு கருவியு மிறந்த
பட்ட

இதற்குச்சாட்சி

திருமந்திரம்.

துரியமிருப்பது சாக்கிரத்துள்ளே
நரிகள்பதினாலு நஞ்சுண்டுசெத்தது
பரியபுரவியும் பாரிற்பிறந்திடந்
துரியமிருப்பிடஞ் சொல்லவொண்ணாதே.

ஆ. மூன்றாந்தத்துவம் - ருகூ.

---

இதற்குச்சாட்சி

திருமந்திரம்.

றப்பதுமுப்பது முப்பத்தறுவருஞ்
செப்புமதிலுடைக் கோயிலுள்வாழ்பவர்
செப்புமதிலுடைக் கோயில்சிதைந்தபி
ஒப்பிலனைவரு மோட்டெடுத்தாரே.

வேதாந்தத் தத்துவக்கட்டளை
முற்றிற்று.

---

# விளம்பரம்.

| | A. | P. |
|---|---|---|
| விநாயகரகவல் - இரட்டைமணிமாலை | 0 | [illegible] |
| விநாயககவசம் - சிவகவசம் - சத்திகவசம்-சரஸ்வதிதோத்திரம் இலக்குமிதோத்திரம். | | 0 |
| வேழமுகம் - உலகநீதி ... ... ... | 0 | 6 |
| அருணகிரிநாதர் வகுப்புகள் ... | 0 | 6 |
| கந்தரலங்காரம் ... ... ... | 1 | 0 |
| கந்தரனுபூதி ... ... ... | 0 | 6 |
| திருமுருகாற்றுப்படை ... ... | 0 | 6 |
| வேல்விருத்தம்-மயில்விருத்தம் ... | 0 | 6 |
| முருகரந்தாதி ... ... ... | 0 | 6 |
| கந்தர் சஷ்டிகவசம் ... ... | 0 | 6 |
| கந்தர் கலிவெண்பா ... ... | 0 | 6 |
| சுந்தரர்வேடுபறி-பஞ்சரத்நத் திருப்புகழ். | 0 | 9 |
| திருத்தொண்டத்தொகை - போற்றிக்கலிவெண்பா. | 0 | 6 |
| நமச்சிவாயமாலை ... ... ... | 0 | 6 |
| சரஸ்வதியந்தாதி ... ... ... | 0 | 6 |
| வராகிமாலை ... ... ... | 0 | 6 |
| கபிலரகவல் ... ... ... | 0 | 6 |
| விநாயகரகவல்முதலிய 17 - புத்தகங்களும் ஒன்றாகக் கட்டியது. | 8 | 0 |



உ

ஸ்ரீ சத்குருப்யோ நம:

ஸ்ரீ சேஷாத்திரிசிவனா ரருளிச்செய்த

# நாநாஜீவவாதக்கட்டளை

மூலமும்.



தஞ்சைமாநகரம்

பிரஹ்மநிஷ்ட பண்டித

ஸ்ரீ வே. குப்புஸ்வாமிராஜா அவர்கள்

மாணாக்கருள் ஒருவராகிய

ஸ்ரீ லஸ்ரீ

இராமசுவாமி ஐயர் அவர்கள்

இயற்றிய

அரும்பதவிளக்க உரையும்.



இவை

தஞ்சை

ஸ்ரீ வித்தியாவிநோதினி முத்திராசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.



இதன் விலை] 1911 [அணா உ.



ஸ்ரீகணேசாயநம:

# முகவுரை.



அகில லோகநாயகனான ஸ்ரீ பரமேசுவரன், பரமாசத்தராய் நம்மை நிலைமைப் பகுப்பின்றித் துக்கசாகரத்தில் மூழ்கியுள்ள ஜீவர்கள் கிரமமாகச் சுகத்தை யடையும் பொருட்டு வெளியிட்டருளிய அநாதியான வேதத்தின்க ணடங்கிய கர்மம், பக்தி, ஞானமென்னும் மூன்று காண்டங்களுள் ஞானகாண்டமாகிய உபநிடதப்பொருள்களை யுள்ளவாறுணர்ந்து பிரமாத்ம ஐக்கிய ஞானத்தால் சுவாநுபூதிநிலையிலிருந்து கைவல்லியத்தை யடைந்த ஸ்ரீ சேஷாத்திரி சிவனாரென்னும் பெரியார் செய்த நாநாஜீவவாதக் கட்டளையென்னுமிந்நூல் நீண்ட காலமாயுலகில் விளங்கிவருகிறதென்பதும், இதற்குப் பலராற் பலவுரைகளெழுதப்பட்டிருக்கிறதென்பதும் பலரும் அறிந்த விஷயமே; அங்ஙனமாயினும் காலஞ்செல்லச் செல்ல இந்நூலிலுள்ள விஷயங்கள் சில

விடங்களில் பழமையான ஏட்டுப்பிரதிக ளுக்கு மாறுபட்டிருக்கின்றன வென்றும், இதற்கெழுதிய வுரைகளும் ஸ்ரீ விசாரசந்திரோதயம், பாலபோதம், விசாரசாகரம், விருத்திப்பிரபாகரம், முதலிய பெருநூல்களைப்பயின்றோர்க்கன்றிப் புதிதாய்வேதாந்த வித்தை பயில்வோர்க்குப் பெரும்பாலும் பயன்படவில்லையென்றும், ஆசிரியர் மந்தமதியினர்க் குபகாரமாதல் கருதிச்செய்த விச் சிறுநூலை முந்திய ஏட்டுப் பிரதிகளோடு முரணாமலும் ஆங்காங்குள்ள அரும்பதப் பொருள்களைவிளக்கியும்வெளியிடவேண்டுமென்றும், பலநன்மக்கள் கேட்டுக்கொண்டதற்காக, ஈசனருளை முன்னிட்டுப் பழைமையான ஏட்டுப் பிரதிகளைப் பரிசோதித்தும், அவைகளுக்கு முரணான விடங்களில் பொருள்விரோதமின்றித் திருத்தியும், இன்றியமையாதவிடங்களில் சில அரும் பதங்களுக்கு விளக்கவுரை யெழுதியும் வெளியிடப்பட்டது. பிழையுளதாயிற்றெரிவித்தால் திருத்தி வெளியிடுகின்றோம்.

---

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்.

# நாநாஜீவவாதக்கட்டளை.



## காப்பு.

ஆனைமுக னாறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையு ளுந்.

௧. *௧. சுத்தப்பிரஹ்மமா யிருக்கின்ற *௨. சர்வசாக்ஷியினிடத்தில் அக்கினி

---

* ௧. சகஜம் ஆகந்துகம் என்னும் இருவகை மலமுமின்றிய சுத்தமாய் சகஜஞ்செம் பிற்களிம்புபோல இயற்கையாய். ஆகந்து கம் நீரிற் பாசிபோலச் செயற்கையாம.

* ௨. சகல திரிபுடிகளின் வியாபாரங்களையும் காண்பது சாக்ஷியெனப்படும். சாக்ஷித்தன் மை கேவலமான சுத்தப்பிரமத்திற் கில்லை யென்று ஸ்ரீ சங்கராசார்யர் முதலி யோர் கைவல்யநவநீதத்தின் வியாக்கி யானத்திற் கூறியிருத்தலால் சர்வசாக்ஷி யென்றார் விசேஷணமாக்குக் கூறியது மிசையாமெனக் காணப்படுகின்றது.

யிற்சூடுபோல அபின்னமாக வொரு சக்தி யுண்டு;

அந்தச் சக்தி அவ்விதப் பிரஹ்மத்திலடங்கி யிருக்கும்பொழுது அதற்குச் சுத்தப்பிரஹ்மமென்று பெயர்.

இந்தச் சக்தி * ௩. விசிரும்பித்துச் சுத்தப்பிரஹ்மத்தை * ௪. வியாபிக்கும்பொழுது அது பலவகையின் வியாபகங்களுக்குள்ளிருக்கபடியால் அதற்குப் பரப்பிரஹ்மமெனப் பெயராயிற்று.

௨. * ௫. இலக்ஷணரூடியாயிருக்கின்ற இந்தச் சக்திக்குப் பிரகிருதியுடைய சந்நிதானத்தில் புருஷசமூகத்தில் ஸ்திரீக்கு இன்பஞ்சனிக்காற்போல * ௬. அவிகிருதசத்துவரஜஸ்தமோகுணங்க ளுண்டாயின.

* ௩. விசிரும்பித்தல் = விரிதல்.
* ௪. வியாபித்தல் = சூழுதல்.
* ௫. எவ்வகை இலக்கணமுமின்றிய இலக்ஷணரூடியமெனப்படும்
* ௬. விகாரப்படாதது அவிகிருதமெனப்படும்

இந்தச் * எ. சுத்த சத்துவத்திற்கு ஆநந்தரூபசத்தி யென்று பெயர்.

* அ. சுத்த ரஜசிற்குச் சித்துருபசத்தி யென்று பெயர்.

* க. சுத்த தமசிற்குச் சத்துருபசத்தி யென்று பெயர்.

இவற்றுள்,

* கo. காரணமான ஆநந்தரூப சத்தி

---

* எ. ரஜோதமோகுணங்களால் அமிழ்த்தப்படாமல் அவ்விரண்டையும் அமிழ்த்தியிருப்பது சுத்தசத்துவ மெனப்படும்.

* அ. சத்துவதமோகுணங்களால் அமிழ்த்தப்படாமல் அவ்விரண்டையும் அமிழ்த்தியிருப்பது சுத்தரஜ செனப்படும்.

* க. சத்துவரஜோகுணங்களால் அமிழ்த்தப்படாமல் அவ்விரண்டையும் அமிழ்த்தியிருப்பது சுத்ததம மெனப்படும்.

* கo. சாக்கிர சொப்பனமென்னும் இருவகை அவஸ்தைகளையும் ஒடுங்கியவிடத்துள்ள சத்தியாதலின் இது காரண மெனப்பட்டது.

யுடனே பரப்பிரஹ்மங்கூடிச் * கக. சர்வாநந்த பென்னுஞ் சுழுத்தியவத்தையை யடைகிறபொழுது அதற்குப் பரப்பிரஹ்மமென்கிற பெயாபோய்ப் * கஉ. பரமாநந்த ரென்கிற பெயர் வந்தது.

இந்தப் பரமாநந்தர் * கங. சித்துரூப சத்தியுடனே கூடிச் * கச. சர்வப் பிரகாசமென்னுஞ் சொப்பனவத்தையை யடையும்போது அவருக்குப் பரமாநந்த ரென்கிற பெயர் போய்த் * கரு. தேஜோமய னென்னும் பெயர் வந்தது.

இந்தத் தேஜோமயர் சத்துரூபசத்தியுடனே கூடிச் சர்வவியாபக மென்னுஞ் சாக்

---

* கக. எல்லா ஆநந்தங்களும் இதன் இலேசமாயிருத்தல்பற்றிச் சர்வாநந்த மெனப்பட்டது.

* கஉ. மேலான ஆநந்தசொரூபர்.

* கங. ஞானவடிவ ஆற்றல்.

* கச. விருத்திமுதலியயாவும் இத னேகதேசப் பிரகாசமாயிருத்தலின் இது சர்வப்பிரகாசமெனப்பட்டது.

* கரு. விளக்கவடிவர்.

கிராவத்தைதயை யடையும்போது தேஜோமய ரென்றும் பெயர் போய்ப் *கசு பரிபூரண ரென்றும் பெயர் வந்தது.

௫. இந்த அகண்ட பரிபூரண சச்சிதாநந்தம் பிரஹ்மத்தினிடத்தில் சுத்தியில் இரஜதம்போல * கஎ. மூலப்பிரகிருதி யென்னும் ஒரு சத்தி யுண்டு. அந்தச் சத்தியும் * கஅ. விகிருதகுணமாகிய முக்குணத்துடனே கூடியிருக்கும்.

அந்தப் பிரகிருதியின் சத்துவகுணப் மாயை யெனறும், சர்வஞ்ஞவுபாதி யென்

---

* கசு. எல்லாவற்றிற்கும் சந்தான்பூர்த்தியைக் கொடுத்துக்கொண்டிருத்தலிற் பரிபூரண ராம்.

* கஎ. காரணவடிவப் பிரகிருதி மூலப்பிரகிருதி யெனப்படும். ஆகாசாதிகளுக்குக் காரணமாகிய பிரஹ்மத்தின் பிரதிபிம்பத்துடன் கூடியதான சாத்துவிக இராஜச தாமச மென்னு மூன்று குணங்களின் சாமியாவஸ்தை பிரகிருதி யெனப்படும். ஏற்றத்தாழ்வின்றிச் சமமாக விருத்தல் சாமியாவஸ்தையாம்.

* கஅ. திரிபடையுங்குணம் விகிருத மெனப்படும்

றும், ஈசுவரகாரணசரீர மென்றும் சொல்லப்படும்.

இந்த மாயையினிடத்திலே நிர்மல ஜலப்பிரதிபிம்பம்போலப் பிரம்மம் *௧௧. சலக்ஷணமாகப் பிரதிபிம்பிக்கும்.

இந்தப் பிரதிபிம்பசைதன்யம் *௨0. சர்வஞ்ஞனாகிய ஈசுவரனென்று சொல்லப்படும்.

௪ இந்தச் சுத்தசத்துவகுண மாயையினிடத்திலே

(௧) சுத்தசத்துவத்திற் சத்துவம்,

(௨) சுத்தசத்துவத்தில் ரஜசு,

(௩) சுத்தசத்துவத்தில் தமசு என்று மூன்று குணங்கள் உண்டு,

---

* ௧௧. லக்ஷணத்தோடு கூடியதாக.

* ௨0. மாயையிற் பிரதிபிம்பித்த சிதாத்மாவாகிய பிரஹ்மம் அந்தமாயையைச் சுவாதீனஞ்செய்துகொண்டு, சர்வஞ்ஞதன்மை (முற்றறிவுடைமை) முதலான குணங்களையுடையதாயிருத்தலால் சர்வஞ்ஞனாகிய ஈசுவரனெனப்படுகின்றது.

அவற்றுள்,

(க) சத்துவத்திற் சத்துவ பிரதானமாகும்போது (மேற்படும் பொழுது) அதிற் பிரதிபிம்பித்த ஈசுவரன் சகத்தை ரக்ஷிக்கலால் விஷ்ணு வென்றும்,

(உ) சத்துவத்தில் ரஜசு பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த ஈசுவரன் சகத்தைச் சிருட்டித்தலால் பிரமா வென்றும்,

(ங) சத்துவத்தில் தமசு பிரதானமாகும்போது அதிற் பிரதிபிம்பித்த ஈசுவரன் சகத்தைச் சங்கரித்தலால் உருத்திர னென்றுஞ் சொல்லப்படுவன்

இப்படி மூலப்பிரகிருதியின் சத்துவகுணம் * உச. கற்பனை சொல்லப்பட்டது.

ரு. இனி மூலப்பிரகிருதியின் ரஜோகுணம் மிகுந்ததாய் ஒன்றற்கொன்று தாரதம்மியமு(ஏற்றத்தாழ்வு)ள்ளவைகளா

* உச. கற்பிதம், அத்தியாசம், ஆரோப மென்பன வொருபொருளன.

---

அதிஷ்டானத்திலும் விஷம(விபரீதமான) சத்தா(இருப்பினை)யுடைய அவபாசம் (தோற்றம்) அத்தியாச மெனப்படும்.

அல்லது தனது அபாவாதிகரணத்தில் (தான் இல்லாத இடத்தில்) தனது அவபாசம் அத்தியாச மெனப்படும்.

ஞானமும் அதன்விஷயமும் அவபாச மெனப்படும்.

இங்குக் கூறப்பட்டனவுங் கூறப்படுவனவுமாகிய மாயைமுதற் றேகசரீரமீறாயுள்ள தத்துவங்களனைத்துந் தமக்கதிஷ்டானமான பரமார்த்தசத்தையுடைய பிரஹ்மசைதன்னியத்திலே விபரீதமான வியாவகாரிக அல்லது பிராதிபாசிக சத்தையுடைய அவபாசமாயிருத்தலின் அத்யாசமெனப்படுகின்றன.

என்றுமுள்ள இருப்பு பரமார்த்தசத்தை. அது பிரஹ்மத்தின் இருப்பு

பிரஹ்மஞானபரியந்தமுள்ள இருப்பு வியாவகாரிகசத்தை. அது மூலப்பிரகிருதிமுதல் ஸ்தூலதேகாந்த பிரபஞ்சத்தின் இருப்பாம்.

வியாவகாரிகசத்தையுடைய பதார்த்தஞான பரியந்தமுள்ள இருப்பு பிராதிபாசிகசத்தை. அது இப்பிவெள்ளி சொப்பன பதார்த்தமுதலியவற்றினிருப்பாம்.

இருக்கும். அவைகளுக்கு அவித்தைகளென்றும்; ஜீவகாரணசரீரங்களென்றும் பெயர்.

இந்த அவித்தைகளிடத்திலும் மலினஜலப்பிரதிபிம்பம்போலப் பிரஹ்மசைதன்யம் பிரதிபிம்பிக்கும்.

இந்தப் பிரதிபிம்பசைதன்யங்கள் *௨௨. கிஞ்சிஞ்ஞரென்றும், *௨௩. சிதாபாசஜீவரென்றும், பிராஞ்ஞரென்றும் சொல்லப்படும்.

இந்த அவித்தைகளிடத்திலேயும்

(௧) ரஜசில் சத்துவம்,

(௨) ரஜசில் ரஜசு,

*௨௨. அவித்தையிற் பிரதிபிம்பித்த ஞானாத்மாவாகிய பிரஹ்மம் அந்த அவித்தையின் வசமாகி அற்பஞ்ஞத்தன்மை(சிற்றறிவு)முதலிய குணங்களை யுடையதா யிருத்தலால்கிஞ்சிஞ்ஞ(அற்பஅறிவுடைய) ஜீவனெனப்படுகின்றது.

*௨௩. சித்தின் லக்ஷணமில்லாததாய்ச் சித்தைப்போலத் தோற்றுவது சிதாபாசனெனப்படும்.

௩) ரஜஸ் தமசு என்று மூன்று குணங்களுண்டு.

(௧) ரஜஸில் சத்துவம் பிரதானமாகும் பொழுது அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசர் தத்துவஞானநிஷ்டராவர்.

(௨) ரஜஸில் ரஜசு பிரதானமாகும் பொழுது அதிற்பிரதிபிம்பித்த சிதாபாசர் காமக்குரோதபரராய்க் கருமநிஷ்டராவர்.

(௩) ரஜஸில் தமசு பிரதானமாகும் போது அதிற் பிரதிபிம்பித்த சிதாபாசர் சோம்பல் நித்திரை மயக்கங்களை யுடையவராவர்.

இப்படி மூலப்பிரகிருதியின் ரஜோ குண கற்பனை சொல்லப்பட்டது.

௬. இனி மூலப்பிரகிருதியின் தமோ குணத்திற்கு

(௧) * ௨௪. ஆவரணம்,

---

* ௨௪. அஞ்ஞானத்திலிருப்பதான அதிஷ்டான த்தைமறைக்குஞ்சாமர்த்தியம் ஆவரணசத்தி யெனப்படும்.

(உ) * உரு. விக்ஷேபம்
என்று இரண்டு சத்திகளுண்டு.

அவற்றுள்,

ஆவரணசக்தி யென்பது தத்துவ ஞானியையும் ஈசுவரனையுந்தவிர மற்றும்சிலருக்கெல்லாம் சரீரத்திரயம், சிதாபாசன், சாக்ஷிசைதன்ய மென்பவைகளை யொன்றுக்கொன்று பேதம் (வேற்றுமை) தெரிய வொட்டாமல் மறைக்கும்.

இதனால் மறைபட்ட ஜீவன் இருபத்தொன்பது தத்துவங்களையும் ஒருமைப்பாடாக (ஒற்றுமையாக) நானென்றபிமானிப்பன்.

இந்த அபிமானம் *உசு அகங்காரக்கி

* உரு. பிரபஞ்சமும் அதன் ஞானமுமாகிய விக்ஷேபத்தை யுண்டாக்கும் அஞ்ஞானத்திலுள்ள சாமர்த்தியம் விக்ஷேபசக்தி யெனப்படும்.

* உசு. தானல்லாதனவற்றில் யான் என்னும்புத்தியைச்செய்வதான முடிச்சு அகங்காரக்கிரந்தி யெனப்படும்.

ரந்தி யென்றும், சம்சாரபந்த மென்றும் சொல்லப்படும். சற்குருகடாக்ஷத்தினாலே இந்த ஆவரணம் நீங்கி இருபத்தொன்பது தத்துவங்களுக்கும் ஒன்றற்கொன்றுள்ள வேற்றுமையை *உஎ அறிகிறதே முக்தி

இப்படி ஆவரணசக்தியின் காரியஞ் சொல்லப்பட்டது

---

இதனையே தாதாத்மிய அத்தியாச மென்றுங் கூறுவர். இதன்விரிவை ஸ்ரீ பஞ்சதசி சித்திரதீபத்தின் எ-வது டிப்பணியிற் காண்க.

ஜனனமரணங்கள் சம்சார மெனப்படும். அதிற் கட்டுண்டதற்கு இச்கிரந்தியாகிய அபிமானமே காரணமாகலின் இது சம்சாரபந்த மெனப்பட்டது.

*உஎ. ஞானத்தினாலேயே முக்தியுளதா மென்னும் மிவைமுதலிய சுருதிவாக்கியங்களால் முக்திக்குச் சாதனம் ஞானமாகவிருக்க இங்கு அறிகிறதே முக்தி யென்றது ஞானமுண்டாகிய அக்கணத்திலேயே சர்வதுக்கநிவிருத்திபரமாநந்தப்பிராப்திவடிவ முக்தி யுண்டாகு மென்னுந் துணிவுபற்றிக் கூறியதாம்.

எ. இனி விசேஷபூதோற்பத்தியின்றுஞ் * உஅ. சத்ததன்மாத்திரையான ஆகாசந் தோன்றிற்று.

ஆகாசத்தினின்றும் * உகூ. பரிசதன் மாத்திரையான வாயு தோன்றிற்று.

வாயுவினின்றும் * ௩0. ரூபதன் மாத்திரையான அக்கினி தோன்றிற்று.

அக்கினியினின்றும் * ௩க. ரஸதன் மாத்திரையான அப்பு தோன்றிற்று.

அப்புவினின்றும் * ௩உ. கந்ததன் மாத்திரையான பிருதிவி தோன்றிற்று.

---

* உஅ. சத்தமாகிய அதுமாத்திரமா யிருப்பது சத்ததன்மாத்திரை யெனப்படும்.

* உகூ. பரிசமாகிய அதுமாத்திரமா யிருப்பது பரிசதன்மாத்திரை யெனப்படும்.

* ௩0. ரூபமாகிய அதுமாத்திரமா யிருப்பது ரூபதன்மாத்திரை யெனப்படும்.

* ௩க. ரஸமாகிய அதுமாத்திரமா யிருப்பது ரஸதன்மாத்திரை யெனப்படும்.

* ௩உ. கந்தமாகிய அதுமாத்திரமா யிருப்பது கந்ததன்மாத்திரை யெனப்படும்.

இந்தச் சூக்ஷ்மபஞ்சபூதத்திற்குக் காரணமாக விருக்கின்ற விக்ஷேபசத்தியினிடத்தில் தமசில் சத்துவம், தமசில் ராஜசு தமசில் தமசு என்னும் இவையடங்கியிருக்கிறபடியினாலே அதன் காரியமான இந்தத் தன்மாத்திரையான பஞ்சபூதங்களும் முக்குணத்துடனே பிறந்தன.

இந்தப் பஞ்சபூதங்களுக்குத் தன்மாத்திரைகளென்றும், * ௩௩. அபஞ்சீகிருத பூதங்களென்றும், சூக்ஷ்மபூதங்களென்றும், முக்குணபூதங்களென்றும் பெயர்.

அ. இந்தச் சூக்ஷ்மபூதங்களினின்றும் சூக்ஷ்மசரீரங்களுந் தூலபூதங்களுந் தோன்றின.

அஃதெங்ஙனமெனின்:—

ஆகாசமுதலான பஞ்சபூதங்களினுடைய சாத்வீகாம்சத்திலே பூதத்திற்கொவ்

* ௩௩. எந்தப்பூதங்களுக்குப் பஞ்சீகரண முண்டாக வில்லையோ, அந்தப்பூதங்கள் அபஞ்சீகிருதபூதங்களெனப்படும்.

வொரு மாத்திரை யெடுத்து ஒன்றாகக் கூட்டிவைத்தது * ஙச. அந்தக்கரணம்.

(க) . இந்த அந்தக்கரணத்தில் ஆகாசத்தினம்சங்கூடினதற் கடையாளம்: இந்த அந்தக்கரணமும் ஆகாசத்தைப்போல சகலமான *ஙரு. கேள்விக்கும் இடங்கொடுத்துத் தரிக்கின்றது; இப்படித் தரிக்கின்ற விருத்திக்கு உள்ளமென்று பெயர்.

(உ) இந்த அந்தக்கரணத்தில் வாயுவினம்சங்கூடினதற் கடையாளம்: இந்த அந்தக்கரணமும் வாயுவைப்போல அலைகிறது; இப்படி அலைகிற விருத்திக்கு மனமென்று பெயர்.

(ங) இந்த அந்தக் கரணத்தில் அக்கினியினம்சங்கூடினதற் கடையாளம்:இந்த அந்தக்கரணமும் அக்கினியைப் போல இது இன்னதென்று விளக்குவிக்கின்றது; இப்படி விளக்குவிக்கின்ற விருத்திக்குப் புத்தி யென்று பெயர்.

---

* ஙச. உட்கருவி.

* ஙரு. கேட்கப்படுபவை கேள்விகளாம்.

(ச) இந்த அந்தக்கரணத்தில் அப்புவினம்சங்கூடினதற் கடையாளம: இந்த அந்தக்கரணமும் அப்புவைப்போல விடயங்களைப்பற்றச் செல்லுகின்றது; இப்படிச் செல்லுகின்ற விருத்திக்குச் சித்தமென்று பெயர்.

(ரு) இந்த அந்தக்கரணத்தில் பிருதிவியினம்சங்கூடினதற் கடையாளம்: இந்த அந்தக்கரணமும் பிருதிவியைப்போல கடினமாக நின்று நானென்று அபிமானிக்கின்றது; இப்படி அபிமானிக்கின்ற விருத்திக்கு அகங்கார மென்று பெயர்.

௬. இன்னும் ஆகாசமுதலிய பஞ்சபூதங்களினுடைய சத்துவாம்சத்திலே பூதத்திற்கொவ்வொரு மாத்திரை யெடுத்துத் தனித்தனியே வைத்தது சுரோத்திராதி ஞானேந்திரிய மென்று சொல்லப்படும்.

இவற்றுள்,

(க) சுரோத்திரம் ஆகாசத்தினம்சமானபடியினாலே ஆகாசத்தின்குணமான சத்தமாத்திரத்தை யறியும்.

(௨) துவக்கு வாயுவினம்சமானபடியி னாலே வாயுவின் குணமான பரிசமாத்திரத் தை யறியும்.

(௩) சக்ஷு அக்கினியினம்சமான படியினாலே அக்கினியின் குணமான ரூப மாத்திரத்தை யறியும்.

(௪) சிங்ஙுவை அப்புவினம்சமான படியினாலே அப்புவின் குணமான ரஸமா த்திரத்தையறியும்.

(௫) ஆக்கிராணம் பிருதிவியி னம்ச மானபடியினாலே பிருதிவியின குணமான கந்தமாத்திரத்தை யறியும்.

இப்படி ஐந்தும் ஒன்றோடொன்று கூடாதபடியினாலே ஒன்று மற்றொன்றன் குணத்தை யறியமாட்டாது.

அந்தக்கரணத்தி லேந்துமாத்திரையுட னொன்றாய்க் கூடினதுகொண்டு அதைந்து ஐ ந்திந்திரியத்தினாலும் ஐந்து விஷயத்தையும் அறியும்.

இந்தச் சத்துவகுணத்தி லுண்டான அந்தக்கரணமைந்தும், ஞானேந்திரியமைந் தும ஆகப்பத்தும் சத்துவாம்ச மானபடியி னாலே ஞானசாதன மாயின.

௧0. இன்னும், ஐந்து பூதத்தினுடைய ரஜோம்சத்திலே பூதத்திற் கொவ்வொரு மாத்திரை யெடுத்து ஒன்றாகக் கூட்டிவைத் தது வியானாதி பஞ்சவாயுக்களாம்.

இவற்றுள்,

(௧) வியானவாயு ஆகாயத்தினம்சமா னபடியினாலே ஆகாசத்தைப்போலச் சர் வாங்கமும் வியாபித்திருக்கும்.

(௨) பிராணவாயு வாயுவினம்சமான படியினாலே வாயுவைப்போல இருதயத்தி லிருந்து நாசிபரியந்தம் அலையும்.

(௩) அபானவாயு அக்கினியினம்சமா னபடியினாலே அக்கினியைப்போல * ஜா ஜாடராக்கினியாக வஷ்ணித்துக்கொண்டு,

---

* ஜா, உதராக்கினி.

ருதத்தைப் பற்றிநின்று உண்ட அன்ன பானாதிகளைச் * ஙஎ ஜீரணிப்பிக்கும்.

(ச) சமானவாயு அப்புவினைச்சமான படியினாலே சரீரநடுவான நாபித்தானத்தி னின்று உண்ட அன்னபானாதி ரஸங்களைச் சகல நாடிகளிலும் அப்புவைப்போல இழுக்கும்.

(ரு) உதானவாயு பிருதிவியி னம்சமானபடியினாலே கண்டத்தைப்பற்றிப் பிருதிவியைப்போல கடினமாக நின்று உண்ட அன்னபானாதிகளைக் கடையும்.

இப்பஞ்சவாயுக்களையு மன்றி,

(க) வாந்திபண்ணிவைக்கிறது நாக னென்றும்,

(உ) இமைத்து விழிப்பிக்கிறது கூர்ம னென்றும்,

(ங) குறுகுறுத்துத் தும்பச் செய்கிறது கிரிகர னென்றும்,

---

* ஙஎ. சமிக்கச்செய்யும்

(ச) கொட்டாவி கொள்ளச் செய்கிறது தேவதத்தனென்றும்,

(௫) வீங்குவிக்கிறது தனஞ்சயனென்றும், இவ்வைந்து வாயுக்களுண்டென்று சிலர் சொல்லுவர்.

இந்த ஐந்தும் பிராணவாயு தொழிலானபடியால் வேறல்ல.

௧௧. இன்னும் ஆகாசமுதற் பஞ்சபூதங்களினுடைய ரஜோம்சத்திலே ஆகத்திற் கொவ்வொரு பாகத்தை யெடுத்துத் தனித்தனியே வைத்து வாக்காதி கருமேந்திரியமென்று சொல்லப்படும். இவையாவன,

(க) * ஈடு ஆகாசத்தினிடமாக வாக்கு வசனிக்கும்.

(௨) வாயுவினிடமாகப் பாணி யிடுதலேற்றல் செய்யும்.

(௩) அக்கினியினிடமாகப் பாதம் நடக்கும்.

* ஈடு. ஆகாயத்தை யாதாரமாகக் கொண்டு.

(ச) அப்புவினிடமாகப் பாயுரு மலஜ லாதிகளை வெளிவிடுதல் நன்றாய்;

(ரு) பிருதிவியினிடமாக உபஸ்தம் சுகத்தைப் பண்ணும்.

இவைகளுந் தனித்தனியே யிருந்தலால் ஒன்றும் பிரயோஜனமான தொழிலைச் செய்யமாட்டாது.

பிராணாதிவாயுக்களைந்து மாத்திரை யும் ஒன்றாய்க் கூடினாற்கொண்டு கர்மேந் திரியம் ஐந்தின் வழியினாலும் ஐந்து தொ ழில்களையுஞ் செய்து முடிக்கும்.

இந்த வாயுக்களைந்துங் கர்மேந்திரிய ங்களைந்தும் ஆகாயாதிகளின் பிரேரணைப்படி யினால் கிரியாசாதனமாயின.

௪௨. அந்தக்கரணங்களைந்தும், ஞானேந் திரியங்களைந்தும், வாயுக்களைந்தும், கர்மேந் திரியங்களைந்தும் ஆக இருபது. இந்த உ௦ தத்துவமும் சூக்ஷ்மசரீர மென்று சொல்லப் படும்.

இந்தச் சூக்ஷ்மசரீரம் மாயாப்பிரதிபிம்பனான ஈசுவரனால் அவித்யாப்பிரதிபிம்பரா யிருக்கின்ற ஜீவர்கள் அநேகராகையால் அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்றாகச் சிருட்டித்துக் கொடுக்கப்பட்டது. அப்பொழுது பஞ்சபூதங்களின் சத்துவாம்சமும் ரஜோம்சமுஞ் செலவழிந்தன. தமோகுணமாத்திரஞ் சேடித்தது.

கரு. இனித் தூலபூதவுற்பத்தியைச் சொல்லுகின்றோம்:—

அஃதெங்ஙனமெனின், மிஞ்சின தமோம்சமாயிருக்கின்ற ஐந்து பூதங்களுள் ஒவ்வொன்றையும் இரண்டிரண்டாகப் பகுத்து, முதற்பாதியைந்தனுள், ஒவ்வொன்றையும் நந்நான்காகப் பகுத்து இரண்டாம்பாதியைந்தனுள் தன்னம்சத் (தன்பாகத்)துடனே கூட்டாமல் ஏனைய நான்குபூதத்துடனும் அரைக்கால் அரைக்கால் மாத்திரையாகக் கொடுப்பது பஞ்சீகரண மென்று சொல்லப்படும்.

இப்படிப் பஞ்சீகரணம் பண்ணின தூலபூதங்களிலே ஆகாசத்தில் பரிச ரூப

ரஸ கந்தமாகிய நான்குகுணமும் வியாப்பி யமான (வெளிப்படாதடங்கி யிருக்கின்ற) படியினாலே அதிருசியமாய்ப் (இந்திரியங்களுக்கு விஷயமாகாமற்) போக நிசகுணமாகிய சத்தமும், வாயுவில் ரூப ரஸ கந்தமாகிய மூன்றுகுணமும வியாப்பியமான படியால் அதிருசியமாய்ப் போகக் காரண குணமாகிய சததமும், நிசகுணமாகிய பரிசமும், அக்கினியில் ரஸகந்தமாகிய விரண்டு குணமும். வியாப்பியமானபடியால் அதிருசியமாய்ப்போகக் காரணகுணமாகிய சத்த பரிசமும், நிஜகுணமாகிய ரூபமும், அப்புவில் கந்தகுணம் வியாப்பியமானபடியால் அதிருசியமாய்ப்போசக் காரணகுணமாகிய சத்த பரிச ரூபமும், நிஜகுணமாகிய ரஸமும், பிருதிவியிலே காரணகுணமாகிய சத்த பரிச ரூப ரஸமும், நிஜகுணமாகிய கந்தமுந் தோன்றின.

கச. சூக்ஷ்மபூதங்களினின்றுஞ் சூக்ஷ்மசரீரங்கள் தோன்றினாற்போல பஞ்சீகரணம்பண்ணின தூலபூதங்களினின்றுமாறு

தத்துவமாய், நால்வகைப் பிறப்பாய் மூவகைச் சாதியாயிருக்கின்ற தூலசரீரங்கள் தோன்றின.

௧௫. ஆறு தத்துவமாவன :—

௧. சர்மம் (தோல்),

௨. உதிரம் (இரத்தம்),

௩. மாமிசம் (சதை),

௪. சநாயு (நரம்பு),

௫. அஸ்தி (எலும்பு),

௬. மஜ்ஜை (மூளை)

என்பனவாம்.

நால்வகைத்தோற்றமாவன:—

(௧) ஜராயுஜம் (கருப்பையிற் றோன்றுவது),

(௨) அண்டஜம் (முட்டையிற்றோன்றுவது),

(௩) சுவேதஜம் (வேர்வையிற்றோன்றுவது,)

(ச) உத்பிஜ்ஜம் (மேற்பிளந்து பிறப்பது) என்பனவாம்.

மூவகைச் சாதியாவன:—

(க) *௩௧. இகலோக பரலோக புத்தி இருவகையுங் கொடுக்கிற மானுடசரீரம் உத்தமஜாதி.

(உ) பரலோகபுத்தியை மறைத்து இகலோகபுத்தியை மாத்திரங் கொடுக்கின்ற பசு பக்ஷி முதலிய சரீரம் மத்திமஜாதி.

(௩) இரண்டு லோகத்துப் புத்தியையு மறைத்திருக்கிற மரம் கொடி செடி முதலிய சரீரம் அதமஜாதி

இப்படிப் பிருதிவிதத்துவமா யிருக்கின்ற பூலோகத்திற் கண்டாற்போல அப்பு

* ௩௧. இகலோகத்திலடைதற்குரிய அறம் பொருள் இன்பங்களையும், அவற்றின் சாதனங்களையும் ஆராயும் அறிவுஇகலோகபுத்தியாம். சுவர்க்கமுதலிய பதவிகளையும், மோக்ஷத்தையும், அவற்றின் சாதனங்களையும் ஆராயும் அறிவு பரலோகபுத்தியாம்.

அக்கினி வாயு ஆகாசமென்னப்பட்ட தத்துவங்களினும் முறையே யிருக்கின்ற பிதிர்லோக, தெய்வலோக, யக்ஷ, கந்தருவலோக, சித்தர் லோகங்களிற் றோற்று கின்ற நக்ஷத்திரம், சந்திரன் முதலான பிதிர்க்கள், சூரியன் முதலான தேவதைகள், கந்தருவர், சித்தரென்னப்பட்டவர் சரீரங்களெல்லாம் உத்தமஜாதி.

காமதேனு, ஐராவதம், அந்நம் கருடன் முதலாயின (சரீரம்) மத்திமஜாதி.

கற்பகவிருக்ஷம் பாரிஜாத முதலாயின (சரீரம்) அதமஜாதி.

கரு. (க) இந்தத் தூலசரீரமே அந்நமய கோசமாம்.

சூக்ஷ்மசரீரம் மூன்றுகோசமாகவிருக்கும்.

அஃதெங்ஙனமெனின் :—

(உ) பிராணவாயுவுங் கர்மேந்திரியங்களுங்கூடிப் பிராணமயகோசமாம்.

(௩) மனதும் ஞானேந்திரியங்களுங் கூடி மனோமயகோசமாம்.

(௪) புத்தியும் ஞானேந்திரியங்களுங்கூடி விஞ்ஞானமயகோசமாம்.

(௫) காரணசரீரமே ஆநந்தமயகோசமாம் இப்படிப்பஞ்ச * ௪௦. கோசங்கள் சொல்லப்பட்டன.

௧௭. ஆறுதத்துவமாக விருக்கின்ற தூலசரீரத்திலே இருபதுதத்துவமாகவிருக்கின்ற சூக்ஷ்மசரீரம் இருப்பது எப்படியெனின்: —

கர்மேந்திரியங்களுள் வாக்கும் ஞானேந்திரியங்களுள் சிங்ஙுவையுமவாயிவிருக்கும்.

---

* ௪௦. கோசமென்பது கோசகாரமென்னும் ஓர் வகைப்புழுவானது முட்களினாற் செய்யும் கூட்டிற்காம். அக்கூடு எப்படி அப்புழுவின் க்லேசத்திற் கேதுவாயிருத்தலாற் கோசமெனப்படுகிறதோ, அப்படியே இவ்வந்நமயாதிகளும் மறைத்தல்வாயிலாக ஆத்மாவிற்குக் க்லேசத்திற் கேதுவாயிருத்தலால் கோசமெனப்படுகின்றன.

வாயுக்களுள் உதானவாயுவும் அந்தக்கரணத்துள் மனமும் கண்டத்திலிருக்கும்;

பிராணவாயுவும் புத்தியும் இருதயத்திலிருக்கும்;

சமானவாயுவும் சித்தமும் நாபியிலிருக்கும்;

அபானவாயுவும் பாயுருவும் குதத்திலிருக்கும்;

வியானவாயுவும் அகங்காரமும் சர்வாங்கமும் வியாபித்திருக்கும்;

உச்சியில் உள்ளமும், கருவிழி நுனியிலே சக்ஷு இந்திரியமும், காதிற்குள்ளே சுரோத்திரேந்திரியமும், மூக்குநுனியில் ஆக்கிராணவிந்திரியமும், கழுத்துக்குமேற் றனித்தனியே யிருக்கும்.

கழுத்திற்குக் கீழே கைகால்குய்யங்களில் பாணி பாதம் உபஸ்தம் என்னுமமூன்றிந்திரியங்களும் தனித்தனியே யிருக்கும்.

இப்படித் தூலசரீரதத்துவம் ௯ம், அதிற் குடிபுகுந்த சூக்ஷ்மசரீரதத்துவம் ௨0-ம் ஆகத்ததத்துவம் ௨௯-ம் பஞ்சபூதங்களின் காரியமானபடியால் ஒருமைப்பாடாகக் காரியசரீரமென்று சொல்லப்படும்.

௧அ. அவித்தையிற் பிரதிபிம்பித்தசிதாபாசன் * ௪௧ ஜாக்கிரத்தில் இந்த விருபத்தாறுதததுவத்துடனே கலந்துநின்றபோது * ௪௨, விசுவனென்றும * ௪௩ வியாவகாரிகஜீவனென்றுஞ் சொல்லப்படுவன் * ௪௪ சொப்பனத்தில் தூலசரீரத்தைக்

---

* ௪௧. பதினான்கு இந்திரியங்களாலும் விஷயங்களையறியுங்காலம். ஜாக்கிரமெனப்படும்.

* ௪௨. சூக்ஷ்மசரீரத்தின் அபிமானத்தைவிடாமல் அந்தந்தத்தூலசரீரத்திலும் நான் என்னும் அபிமானத்தைச் செய்தலால் ஜாக்கிராபிமானியாகிய ஜீவன் விசுவனெனப்படுகின்றான்.

* ௪௩. வியாவகாரிகசத்தையுடையவனுதலால் வியாவகாரிகஜீவனும்.

* ௪௪. கரணங்கள் ஒடுங்கியபோது ஜாக்கிரசமஸ்காரத்தால் அர்த்தஞானமுடையதான கிரகிப்

கைவிட்டு அந்தக்கரணத்துடன்கலந்து நின்றபோது * ௪௫ தைஜசனென்றும் * ௪௬ பிராதிபாசிகஜீவனென்றும் * ௪௭ சொப்பனகற்பிதனென்றுஞ் சொல்லப்படுவன் * ௪௮ சுழுத்தியில் காரியசரீரதத்

---

பது கிரகிக்கப்படுவது என்னும் ஸ்புரணம் (விளக்கம்) சொப்பனாவஸ்தையெனப்படும்

* ௪௫. மலினசத்துவகுணப்பிரதான அவித்தையாகிய வுபாதியுடைய காரண சரீரத்தின் அபிமானியான பிராஞ்ஞனென்னும் ஜீவன், தேஜசுசத்தத்தின் வாச்சியமாகிய அந்தக்கரணமும் அதன் சம்பந்தமுள்ள பிராணாதிகளுமாகிய இலிங்கசரீரத்தில் தாதான்மியமாகிய அபேத அபிமானத்தைச்செய்தலால் தைஜசனெனப்படுகின்றான்.

* ௪௬. பிராதிபாதிகசத்தை யுடையவனாதலால் பிராதிபாதிக ஜீவனும்.

* ௪௭. சொப்பனத்திற் கற்பிக்கப்பட்டவனாதலால் சொப்பனகற்பிதனும்.

* ௪௮. சுகத்தை விஷயஞ்செய்வதும் அவித்தையைவிஷயஞ்செய்வதுமாகிய அவித்தியா விருத்தியின் காலம் சுழுத்தியவஸ்தையெனப்படும்.

துவம் இருபத்தாறையுங்கைவிட்டுக் காரணசரீரத்தை மாத்திரம்பொருந்தியிருக்கும்போது * சகூ பிராஞ்ஞனென்றும், *ரு௦ பாரமார்த்திகஜீவனென்றுஞ் சொல்லப்படுவன்.

பிரஹ்மசைதன்யம் சாக்கிரத்துக்குச் சாக்ஷியாயிருக்கும்போது ஜீவாத்மாவென்றும், சொப்பனத்துக்குச்சாக்ஷியாயிருக்கும்போது அந்தராத்மாவென்றும்,சுழுத்திக்குச்சாக்ஷியாகவிருக்கும்பொழுதுபரமாத்மாவென்றும், அவஸ்தாத்திரய(சாக்கிரசொப்

---

* சகூ அவித்தையாகிய காரண சரீரத்தில் தாதான்மிய (அபேத) அத்தியாசத்தால் நான் அஞ்ஞானியென் றபிமானிப்பவனாகிய ஜீவன் பிராஞ்ஞனெனப் படுகின்றான். பிராஞ்ஞையாகிய ஞானதிருஷ்டியான நாசமின்றிய சொரூபம் எவனுக் கிருக்கின்றதோ அவன் பிராஞ்ஞன்; பிராஞ்ஞனே பிராஞ்ஞனென்னும் பெயரையுடையவனாகின்றானென்பது பொருள்.

* இ௦ முடிவிலிவனே பரமார்த்த சத்தையுடையவனாக மிஞ்சுதலால் பாரமார்த்திக ஜீவனாம்.

பன சுழுத்தியென்னு மூன்றற்குஞ் சாக்ஷி யாயிருக்கும்போது ஞானாத்மாவென்றுங் * குக கூடஸ்தரென்றும் சொல்லப்படும்.

இப்படி ஜீவனுக்கு மூன்றுசரீரமும் மூன்றவத்தையும் சொல்லப்பட்டன.

கக. இனி ஈசுவரனுக்குமூன்றுசரீரமும் மூன்றவத்தையுஞ் சொல்லப்படுகின்றன.

உலக (வடிவ) கற்பனையாகத் தோற்றுகின்ற ஸ்தால பஞ்சபூதங்களும், அவற்றிற்றோன்றின மூன்று சாதியாயிருக்கின்ற ஸ்தூலசரீரசமட்டியுங் கூடியது. ஈசுவர

* குக. கூடமென்பது சொல்லனது சம்மட்டிக்காம் அச்சம்மட்டிபோல நிர்விகாரமாக விருப்பது கூடஸ்தரெனப்படும். சொல்லன் அநேக அடிகளையடித்தபோதிலும் சம்மட்டிவிகாரமடையாதிருத்தல் போல மனமாகிய சொல்லன் வியவகாரமாகிய அநேகஅடிகளையடித்தபோதிலு. ஆத்மா எப்படியோ அப்படியே (நிர்விகாரமாக) இருக்கிறது ஆதலால்ஆத்மா கூடஸ்தரெனப்படுகிறது.

ஸ்தூலசரீரமென்றும், விராட்டென்றும் சொல்லப்படும். இதனுடனேகூடிச் சாக்கிராவத்தையைப் பொருந்தியிருக்கின்ற ஈசுவரன் * ருஉ வைசுவாநரனென்றும் இந்த விருவகைக்கும் (தூலசரீர சமட்டிக்கும் சாக்கிராவத்தைக்கும்) அதிஷ்டான சைதன்யம் பிரஹ்மாவென்றுஞ் சொல்லப்படும்.

சூக்ஷ்மபூதங்களைந்தும், அவற்றிற்றோன்றின சூக்ஷ்மசரீரசமட்டியுங் கூடினது ஈசுவர சூக்ஷ்மசரீரமென்றும், இரணியகர்ப்பமென்றும் சொல்லப்படும். இதனுடனேகூடிச்சொப்பனவத்தையைப் பொ

* ருஉ. விசுவ (எல்லா) நரர்களது அபிமானியாயிருத்தலால் அதாவது சகலப்பிராணிகளின் சமூகத்திலும் நான் என்னும் அபிமானமுடையவராயிருத்தலால் ஈசுவரன் வைசுவாநரனெனப்படுகின்றார் வைசுவாநரனாகிய அவரே பற்பலவிதமாக விளங்குகின்றமையால் விராட்டென்றுஞ்சொல்லப்படுகின்றார்

ருந்தியிருக்கின்ற ஈசுவரன் * ௫௩ சூத்திராத்மாவென்றும், இந்த இருவகைக்கும் (சூக்ஷ்மசரீரத்துக்கும் சொப்பனுவத்தைக்கும்) அதிஷ்டானசைதன்யம் விஷ்ணுவென்றும் சொல்லப்படும்.

இந்தத் தூல சூக்ஷ்ம மிரண்டின் வாசனையுடனே கூடினமாயை ஈசுவரகாரணசரீரமென்றும், அவ்வியாகிருதமென்றும் சொல்லப்படும். இதனுடனேகூடிச் சுழுத்தியவத்தையைப் பொருந்தியிருக்கின்ற ஈசு

---

* ௫௩. சுத்த சத்துவகுணப்பிரதானமாயையையுபாதியாகவுடைய பரமேசுவரன் இலிங்கசரீரத்தில் நான் என்னும் அபிமானியாகவிருத்தலால் இரணிகர்ப்பனெனப்படுகின்றார் இவ்விரணியகர்ப்பனே சூத்திராத்மாவாம்.

ஜீவர்களது திருஷ்டியையுத்தேசித்து ஈசுவரனுக்கு அபிமானஞ்சொல்லப்படினும் அவ்வீசுவரன் மாயையைத் தன்வசமாகக்கொண்டவனாதலால் சொரூபாவரணமின்மையால் ஜீவர்கள் அடைகின்ற சுகதுக்காதி துவந்துவதருமங்களையவனடைதலின்றும் இங்ஙனமே பிறவிடங்களினுமறிக.

வரன் * ௫௪ அந்தரியாமியென்றும் இந்த இருவகைக்கும் (காரணசரீரத்துக்கும் சுழுத்தியவத்தைக்கும்) * ௫௫ அதிஷ்டானசைதன்யம் உருத்திரனென்றும் சொல்லப்படும்.

ஜீவன் தன் மூன்றவத்தையிலும் தன் மூன்றுசரீரமாகவிருக்கின்ற இருபத்தேழு தத்துவங்களுடனும் நானென்று கலந்து நின்றாற்போல ஈசுவரனும் தன்மூன்று

---

* ௫௪. மூலப்பிரகிருதிவடிவ சமட்டிகாரணசரீர அபிமானியாகிய ஈசுவரன் அந்தர்யாமியெனப்படுவன்.

* ௫௫. எது தான் நிர்விகாரவடிவமாக விருந்துகொண்டு அவித்தையினாலாகிய கற்பிதகாரியத்திற்கு ஆசிரயமாகின்றதோ, அதுஅதிஷ்டானமெனப்படும் அல்லது எதனையறியாதபோது ஆரோபந்தோற்றுமோ? எதனையறிந்தகாலத்து ஆரோபந்தோற்றுகிறதில்லையோ அது அதிஷ்டானமாம். அது கற்பிதசர்ப்பத்திற்கு அதிஷ்டானம் இரச்சுவாதல்போலாம் இவ்வதிஷ்டானத்தினையே பரிணாமியுபாதானத்திற்குவேறான விவர்த்தவுபாதானமென்றுங்கூறவர்.

சரீரமாகவிருக்கின்ற முப்பத்திரண்டு தத்துவங்களுடனும் கலந்திருப்பன்,

௨0. ஆகையினால், சிதாபாசன் தன்சரீரமாத்திரத்தில் கலந்திருப்பன்.

ஈசுவரன் தன்னுடையசரீரமாகியசகல சரீரங்களோடும் சகலப் பிரபஞ்சங்களோடும் கலந்திருப்பன்.

இந்த இருவகைக்கும் (சிதாபாசனுக்கும் ஈசுவரனுக்கும்) சாக்ஷியாக விருக்கிற பிரஹ்மசைதன்யம் சகல சரீரங்களிலும் சகல பிரபஞ்சத்திலும் நிறைந்து அப்பாலும் பக்ஷதத்திகளையும் அதிக்கிரமித்து எல்லையற்றிருக்கும்,

௨௧. ஜீவனுக்கு ஸ்தூலசரீரவியவகாரத்திற்கு அங்கமான ஷட்கோச தத்துவம் ௬, சூக்ஷ்மசரீரதத்துவம் ௨0 ; ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம ௫, ஆகத் தத்துவம் ௩௧.

சூக்ஷ்மசரீரவியவகாரத்திற்கு சூக்ஷ்ம சரீரதத்துவம் ௨0 ; ஜீவன், ஈசுவரன், அவி

த்தை, வித்தை, பிரஹ்மம் ரு, ஆகத்தத்து வம். உரு.

காரண சரீரவியவகாரத்திற்கு ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் ஆகத் தத்துவம். ரு.

ஜீவவியவகாரத்திற்கு ஜீவன், ஈசுவரன், பிரஹ்மம் ஆகத்தத்துவம். ௩.

சாக்ஷிவியவகாரத்திற்குச் சாக்ஷி க.

ஈசுவரனுக்குத் தூலசரீர வியவகாரத்திற்குச சமட்டி அந்நமயகோச தத்துவம்சு;

சமட்டி சூக்ஷ்மசரீரதத்துவம் உ0;
சமட்டி ஜீவன், அவித்தை, உ;
ஈசுவரன், வித்தை, பிரஹ்மம் ௩;
ஸ்தூலபூதம் ரு;
ஆகத் தததுவம, ௩௬.
சூக்ஷ்மசரீரவியவகாரத்திற்குச்ச
மட்டி சூக்ஷ்மசரீர தததுவம உ0;

சமட்டி ஜீவன், அவித்தை உ;
சூக்ஷ்மபூதம் ரு;
ஈசுவரன், வித்தை, பிரஹ்மம் ௩;
ஆகத் தத்துவம். ௩0.
காரணசரீரவியவகாரத்திற்கு
ஈசுவரன், வித்தை, பிரஹ்மம் ஆகத் தத்துவம் ௩.
ஈசுவர வியவகாரத்திற்கு
ஈசுவரன் பிரஹ்மம். உ.
பிரஹ்ம வியவகாரத்திற்குப்
பிரஹ்மம். க.
இந்திரிய வியவகாரத்திற்கு
இந்திரியம் ௫;
ஷட்கோசதத்துவம் சா;
அந்தகரணம் ரு;
வாயு ரு;
ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் ரு;

ஆகததத்துவம். ௨௨.

மனோராச்சிய வியவகாரத்திற்கு அந்தக்கரணம் ௫;

ஜீவன், ஈசுவரன், அவித்தை, வித்தை, பிரஹ்மம் ௫;

ஆகத் தத்துவம். ௩௦.

இப்படித் தத்துவங்களின் தோற்றமும் நிலையும் சொல்லப்பட்டன.

௨௨. இனிக் தத்துவங்கள் ஒடுங்குகிற வழியைச் சொல்லுகிறோம்.

அஃதெங்ஙனமெனின்:—

சகல ஜீவர்களிடத்திலு மிருக்கின்ற ஸ்தூலசரீரங்களனைத்தும் தமக்காதாரமான ஸ்தூலபூதங்களிலே மடிந்து பூதமாத்திரமாக வொடுங்கும்.

இந்த ஸ்தூலபூதங்களும் பஞ்சீகரணம் விட்டுத் தன் மாத்திரையான தமோகுண பூதங்களாக மிஞ்சும்,

அப்பொழுது கேவலம் இரணியகர்ப் பாவஸ்தை யென்று சொல்லப்படும்.

சூக்ஷுமசரீரதத்துவங்கள் இருபதுங் கட்டுவிட்டுப் பூதங்களினுடைய சத்துவ குணமும் ரஜோகுணமுமாக வொடுங் கும்.

ஒடுங்குமெனின் : —

சகலபிராணிகளிடத்திலுமிருக்கின்ற அகங்காரமும், ஆக்கிராணமும், உதான னும், உபஸ்தமும் பிருதிவியிலொடுங்கும்.

சித்தமும், சிங்குவையும், சமானனும், பாயுருவும அப்புவிலொடுங்குமு.

புத்தியும், சக்ஷுவும், அபானனும், பாதமுமு அக்கினியிலொடுங்கும்.

மனதும், துவக்கும், பிராணனும், பாணியும் வாயுவி லொடுங்கும்.

உள்ளமும், சுரோத்திரமும், வியான னும், வாக்கும் ஆகாசத்திலொடுங்கும்.

அப்பொழுது பழையபடியே முக்குணமுடைய சூக்ஷ்ம பூதங்களாம்.

இந்தச் சூக்ஷ்மபூதங்களுள் பிருதிவி அப்புவிற் கரைந்தொடுங்கும்

அப்புவும் அக்கினியிற் சுவறியொடுங்கும்.

அக்கினியும் விளக்குப்போல வாயுவிலணைந்தொடுங்கும்,

வாயுவும் ஆகாசத்திலோய்ந் தொடுங்கும்.

ஆகாசமும் விக்ஷேப சத்தியிலொடுங்கும்,

ஆவரணசத்தியும், விக்ஷேபசத்தியும் மூலப்பிரகிருதியின் தமோகுண மாத்திரமாய் ஆலமரம் ஆலவித்திலொடுக்கிறாற்போல இன்னமொரு சிருட்டிக்கு வித்தாக மாயையிலும் அவித்தையிலும் ஒடுங்கும்.

அந்தமாயையும் அவித்தையும் அதி நுட்பமான மூலப்பிரகிருதியென்று சொல்லப்படும் விந்து தத்துவத்தி லொடுங்கும்.

அந்தவிந்துவும் பாம்பென்ற பெயர் போய்ப் பழுதையாகக் கண்டாற்போலத் தனக்கதிஷ்டானமான பிரம்மசைதன்ய மாத்திரமாகவொடுங்கும்

இப்படிப் பொய்யெல்லா மெய்ப்பொருளொன்றாகக்கண்டு அது சிவசுபாவசித்தமாய் நிஜமாகவிருக்கின்ற தன்வடிவெனக் கண்டு தெளிந்து கவலைகெட்டிருக்கின்றவனே ஜீவன்முக்தன். இப்படித்தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப்பட்டது.

உரு. இப்படித் தோற்றி யொடுங்குகின்ற தத்துவம் ௩௫.

அஃதெங்ஙனமெனின்: —

பூதம் ரு,

ஸ்தூலசரீரதத்துவம் ௬,

சூக்ஷ்மசரீர தத்துவம். ௨0,

காரணசரீரமான மாயை அவித்தை உ.

இவற்றிற் பிரதிபிம்பித்த ஈசுவரன் ஜீவன்—உ.

ஆகத்தோற்றியொடுங்குகின்ற தத்துவம் ௯௫.

இவற்றிற்கெல்லாம் அதிஷ்டான சைதன்யமாக விருக்கின்ற பிரஹ்மம். க.

ஆகத்தத்துவம். ௯௬.

உச. இவற்றுள்,

பூதம ௫, மாயை க, மாயாப்பிரதிபிம்பரான ஈசுவரன் க, பிரஹ்மம க.

ஆக இந்த எட்டும் சகலபிராணிகளாலும் சமுதாயமா(பொதுவாக) அநுபவிக்கப்படும்.

௫. ஏனைய விருபத்தெட்டும் அந்தந்தப் பிராணிகளால் பிருதக்காக (வேறுவேறாக) அநுபவிக்கப்படும்.

அஃதெங்ஙனமெனின்:—

பிருதிவிதத்துவம் ஒன்று இறக்கி யாவருக்கும் ஆதாரமில்லை ஜலமில்லையே யின், யாவருக்குங் குளிர்ந்து பதஞ்செய் வில்லை; தேயுவில்லாதிருந்தால் பாகமில்லை வாயுவில்லாவிட்டால் புடை பெயர்ச்சியில் லை : ஆகாசமிறக்கில் ஒருவருக்கும் அவகாச மில்லை; மாயையும் மாயாப்பிரதிபிம்பரு மிறக்கில் எல்லாச்சமயங்களுக்குந் தெய்வ மில்லை; பிரஹ்மமில்லாவிடில் ஒருவருக்கும் அறிவில்லை. ஆகையால் இந்த எட்டும் எல் லாருக்கும் சமுதாயமாம்.

பிருதக்கெங்ஙனமெனின்:—

ஒருவனுக்கு ஸ்தூலசரீர மிறக்கில் யாவருக்குந் தூலசரீர மிறவாதபடியினு லும், சூக்ஷமசரீரத்தில் ஒருவனுக்கு அங்க வைகல்யம் ( உறுப்புக்குறைவு ) வந்தால் யாவருக்கும் அது வாராதபடியினுலும்,முத் தராயிருக்கின்ற சுகர் வாமதேவர் முதல னேருக்கு அவித்தையும் ஜீவனும் இற ந்துபோயிருக்க மற்றையோருக்கெல்லாம

அவை பிறவாமலிருந்தபடியினாலும் இந்த விருபத்தெட்டுத் தத்துவமும் ஒவ்வொருவருக்கும் பிருதக் கென்பதில் (வேறுவேறென்பதில்), சந்தேகமேயில்லை

௨௬. இந்தத் தத்துவம் முப்பத்தாறனுள்,

எப்பொழுதுந் தானாகவே காணப்படுகின்ற தத்துவம ௧.

எப்பொழுதுந் தனக்கன்னியமாகவே காணப்படுகின்ற தத்துவம் ௭.

தானாகவுந் தனக்கன்னியமாகவும் அநுபவிக்கப்படுகின்ற தத்துவம் ௨௮.

அஃதெங்ஙனமெனின்:—

அவஸ்தாத்திரய சாக்ஷியாயிருக்கின்ற பிரஹ்மசைதன்யம் எல்லா அவஸ்தைகளிலுந் தானாகவே விளங்குகையினாலும் மற்றத் தத்துவங்கள்போலத் தனக்கந்நியமாக விளங்காமையினாலும் பிரஹ்ம சைதன்யமொன்றுமே தானாகவிருக்கின்றது.

மாயாப்பிரதிபிம்பராகிய ஈசுவரன், மாயை, பஞ்சபூதம் என்னுமிவ் வேழின்றொழிலான பஞ்சகிருத்தியம், தசாவதாரம், பொறுத்தல், திரட்டல், தகித்தல், உலர்த்தல், இடங்கொடுத்தல் முதலானவை ஒருபோதுந் தன்னுடைய தொழில்களாகக் காணப்படாமையின், இந்த ஏழுதத்துவமுந் தனக் கன்னியமே யல்லாமல தானாகமாட்டா.

மற்றவிருபத்தெட்டுததத்துவங்களுள்,

நான் பிராஹ்மணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரஹ்மசாரி, நான் கிருகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் ஆண், நான் பெண், நான் கரியன், நான் சிவப்பன், நான் குட்டையன், நான் நெட்டையன், நான் பருத்தேன், நான் இளைத்தேனென்று தானாக வழங்குகின்ற ஸ்தூல சரீரமாகிய ஆறுதத்துவமும்,

மற்றொருவேளையிலே தனக்குப் புறம்புபட்டு என்மாடு என்கன் றென்றாற்போல

என் சரீரம் பருத்தது, இளைத்தது, நரைக்தது, என் சரீரம் பிறந்து இத்தனைநாளா யிற்றென்று தான் வேறு ஸ்தூல சரீரம் வேறாக வழங்குகின்றபடியினாலும்,

நான் கண்டேன், கேட்டேன், தொட்டேன், போகித்தேன், கொடுத்தேன், வாங்கினேன், நடந்தேன், புசித்தேன், சிந்தித்தேன், நிச்சயித்தேன். இந்தப் பஞ்சத்திற்கு ஜீவித்தேனென்று தானாக வழங்குகின்ற சூக்ஷமசரீரதத்துவம் இருட்டும்,

மற்றொரு வேலையிலே தனக்குப்புறம்பு பட்டு எனவீடு என்னுடைமை யென்றாற் போல என் கண், என் காது, என் மூக்கு, என் நாக்கு, என் கை, என் கால், என் மனம், என் புத்தி, என அகங்காரம், என் சித்தம், என் பிராணனென்று தான்வேறு அவை வேறாக வழங்குகின்றபடியினாலும்,

நான் அறியேன் அறிவேனென்று தானாக வழங்குகின்ற * ௫௬. அஞ்ஞான

* ௫௬. இல்லை தோற்றமில்லை யென்று மறைப்பதும் ஒன்றை மற்றொன்றாகக் காட்டுவது

மும் சிதாபாசனும் மற்றொரு வேளையிலே தனக்குப் புறப்பட்டு என்னஞ்ஞானைமஎன் ஜீவனென்று வழங்குகின்ற படியினாலும் இந்த இருபத்தெட்டுத் தத்துவமும் காரண கவுந் தனக்கன்னியமாகவும் வழங்கப்படு தல் சித்தம் (பெறப்பட்டது).

இப்படிச் சொல்லிய குருவைப் பார்த் துச் சிஷ்யன், கேட்குப்படி (விநயபூர்வக மாகக்) கேட்பதாவது:—

சுவாமி இந்த இருபத்தெட்டுத் தத்துவ முந் தானால் சாக்ஷியைப்போல ஒரு தன் மையாகத் தோற்றவேண்டுமே யல்லாமல் ஈசுவரன், மாயை, பஞ்சபூத மென்பவற் றைப்போலத் தனக்கந்நியமாகக் காணக் கணக்கில்லை. (காரணமில்லை) இந்த இருபத் தெட்டுந் தனக்கந்நியமேயானால் எப்பொழு தும் புறப்புபட்டேயிருக்கவேண்டுமே யல்

---

மான இரண்டு சக்தி (சாமர்த்தியங்) களை யுடையதாய் உற்பத்தியில்லாததாய் இருக்கிற தென்று விவகரிக்கப் படுவதாயுள்ள பதார்த் தம் அஞ்ஞானமாம்.

லாமல் தானாக வழுங்கக் கணக்கில்லை. அவைகள் தானுமாய்த் தனக்கந்நியமுமாயிருக்குமென்பது இருட்டாதித்தனென்றாற் போலும் வெள்ளாழ தீக்ஷிதனென்றாற் போலும் விருத்தமா" மென்கிறசங்கைக்கு (ஆக்ஷேபத்திற்கு) குரு சொல்லுகின்றார்:-

பரமார்த்தமா(உண்மையா)கத்தானென்கிற தொருவகையும்.

அத்தியாசத்தி(மயக்கத்தி)னாலே தானென்கிறதொருவகையும் ஆக இருவகையுமுண்டு.

சாக்ஷி சைதன்யத்தைத் தானென்பது பரமார்த்தமல்லாமல் உபசாரமல்ல.

தனக்கந்நியமாகவிருக்கிற இந்த இருபத்தெட்டையுந் தானென்பது கட்டையைக் கள்ளனென்றாற்போலவும், பழுதையைப் பாம்பென்றாற்போலவும், புத்திர தாராதிகளைத் தானென்றாற்போலவுமயக்கமேயல்லாமல் உண்மையல்ல;

ஆகையினால் அஞ்ஞானகாலத்துத் தானல்லவென்று காணப்பட்ட தத்துவம்.ஏழு. இப்பொழுது இப்படிப்பட்டவிவேகம்பண்ணினபிற்பாடு தானல்லவென்று காணப்பட்ட தத்துவம் இருபத்தெட்டு ஆகமுப்பத்தைந்து தத்துவங்களையும் அதததற்குச் சொன்ன குணங்குறிகளுடனேகாண்கின்ற அறிவானது கடத்தைப் பார்க்கிறவன் அக்கடத்திற்குப் புறம்பாகவே யிருந்து கடத்தைப் பார்ப்பதுபோல அவைகட்கந்நியமாகவே யிருந்து அவைகளை யறிகிறதென்றும், முப்பத்தாறுந் தத்துவமாகிய அதுவே தானென்றும், அதுவேசிவமென்றுங் கலக்கமறத் தெளிந்தவனே ஜீவன்முக்தனென்றுசொல்லப்படுவன்.

உகா. இப்படிப் பிரஹ்மமே தானென்றும், ஏனைய முப்பத்தைந்து தத்துவங்களுந் தனக்கந்நியமென்றும் பிறித்தறியாத அவிவேகிகள்? அகங்காரக் கிரந்தியினாலே புத்திரதாராதிகள் தபிக்கின்றதைத் தாம் தபிக்கின்றோ மென்கிற மூடகாரம்போல

இந்த இருபத்தெட்டினுடைய தொழில் களையுந் தமது தொழிலென்று மயங்கு கின்றபடியினால், இந்த இருபத்தெட்டினா லும் ஆர்ஜிக்கப்பட்ட (சம்பாதிக்கப்பட்ட) புண்ணிய பாவங்களினாற் கட்டுப்பட்டு அந் தக் கன்மத்தின்படியே ஜனனமரணாதி சம் சாரத்திலே அடிபடுகிறோமென்று மயங்கு வர். பிரஹ்ம சைதன்யமே தானென்றும் மற்ற முப்பத்தைந்துந் தானல்லவென்றுந் தெளிந்த விவேகியானவன் அகங்காரக்கிரந் தியற்றபடியினால் இந்த இருபத்தெட்டி னுடைய தொழிலையும் நான் செய்யவில்லை யென்றும், இந்த இருபத்தெட்டும் புசிக் கிறதை நான் புசிக்கவில்லையென்றுந் திடப் படத் தேறி மயக்கமற் றிருக்கிறபடியால் இந்த இருபத்தெட்டினாலும் ஆர்ஜிக்கப் பட்ட புண்ணிய பாவங்களினின்றும் விடு பட்டுக் கன்மமில்லாதபடியால் ஜனன மர ணாதி சம்சாரமில்லாமல் முக்தனாகிப் பிர ஹ்ம மாத்திரமாகவேயிருப்பன். இவனை

* ௫எ ஜீவன்முக்தனென்றும், *௫அ. திடப

---

* ௫எ. "எவன் சுரோத்திராதி யிந்திரியங்கள் காரணஞ்ஞானத்தில் லயத்தை யடையாமல் தந்தம் கோளகங்களிலே யிருத்தலால் ஜாக்கிரத்தை யடைந்திருக்கின்றானோ, மனதுக்குப் பகிர்முக விருத்தியில்லாமையாற் சுழுத்தியை யடைந்திருக்கின்றானோ, எவனுக்கு இந்திரியங்களால் விடயாநுபவ ரூபமான ஜாக்கிரமில்லையோ, எவனுடையபுத்தி நான் பிரஹ்மவித்தென்னும் அபிமான முதலிய வாசனையற்றதாக விருக்கின்றதோ அவன் ஜீவன்முக்த னெனப்படுவான்" என்னு மிவை முதலிய வாக்கியங்களால் வாசிட்ட முதலிய நூல்களில் சொல்லப்படும் இலக்கணமுடையவனைச் ஜீவன்முக்த னென்றறிக.

* ௫அ. "எவன் தன் மனதினிடத்துள்ள எல்லாக் காமங்களையும்நீக்கி ஆன்மாவினிடத்து ஆன்மாவினாலேயே திருப்தியடைந்திருக்கின்றானோ, எவன் மித்தையாகத் தோற்றுகின்ற சுகதுக்காதிகளையுண்டாக்கும்மகிழ்ச்சி வாட்டங்களைக்கெடுத்து, ஸ்துதி நிந்தைகளினுண்டாகும் விருப்பு வெறுப்புக்களை யொழித்து, ஆமையானது சிரசு முதலிய ஐந்துறுப்

பிரஞ்ஞனென்றும், * ௫௯. அதிவர்ணாச்

புக்களையுந் தனது உடம்பின் கண்ணே யடக்கிக்கொள்வது போல் தன்பத்ததத் தருஞ் சுரோத்திராதி இந்திரியங்களெந்தையும் சப்தாதி விஷயங்களினின்றும் நீக்கித் தத்தங் கோளகங்களில் நிறுத்தி ஆன்மாவினிடத்து ரமித்திருக்(அழுந்து)கின்றனோ? எவன் அநுகூலப் பிரதிகூலப் பதார்த்தங்களில் விருப்பு வெறுப் பில்லாமல் அவைகளை யுதாசீனமாக வசனிக்கின்றனோ, எவன் ஜலம் நிறைந்த சடலினிடத்துப் பல நதிகள் வந்து சேரினும் அக்கடல் சிறிதும் பெருகி விகாரமடையாதது போல பிராரப்தகர்மத்தால் தன் சந்நிதியில் சப்தாதி விஷயங்கள் ஒருங்கேவந்து பொருந்தினும் அவ்விஷயங்களால் விகாரமடையாதிருக்கின்றனோ அவன் ஸ்திதப்பிரஞ்ஞனெனப்படுவான்" என்னுமிவை முதலிய வாக்கியங்களால் கீதையாதி நூல்களிற் சொல்லப்படு மிலக்கண முடையவனைத் ஸ்திதப்பிரஞ்ஞனென்றறிக.

௫௯. "எவன் மாயையினாற் கற்பிக்கப்பட்ட வருணாச்சிரமங்களில் எதுவுஞ்சித்துருபனுக்கிருக்கிறதமக்குக் கிடையாதென்றும்?பொன்னின் கண் பூடணாதிகள்போலவும் ? சுத்தியில் ரஜ

சிரமி யென்றும். * ௬௰. குணாதீத னென்

---

தம் போலவும்? இரச்சுவிற் சர்ப்பம் போலவும்? மாயாகாரியமான மகதத்துவ முதலிய ஜகத்துமுழுவதும் நம்மிடத்திற் கற்பிக்கப்பட்டனவென்றும்? சூரியனுடைய சந்நிதியில் உலகஞ்சேட்டிக்கிறது ( அசைவது ) போல சகல ஜகத்தும் நமதுசந்நிதியிற் சேட்டிக்கிறதென்றும்? வேதாந்த வாக்கியங்களால் அறிகின்றானோ அவன் அதிவருணச்ரமி யாவன்? என்னுமிவை முதலிய வாக்கியங்களால் சூதசங்கிதைமுதலாம் நூல்களில் சொல்லப்படும் இலக்கணமுடையவனை அதிவருணச்சிரமி யென்றறிக.

* ௬௦. "எவன் சுக துக்கங்கள்; இவற்றின்சாதனமான பிரியாப்பிரிய விஷயங்கள், ஸ்துதி நிந்தைகள், சத்துரு மித்துருக்கள், மானவமானங்கள், பொன் ஓடுகளாகிய இவைகளில் சமசித்தமுடையவனாய், ஒருவிதமுயற்சியுமில்லாதவனாய், ஆத்ம நிஷ்டனாகவிருக்கின்றானோ, அவன் குணாதீதனெனப்படுவான்" என்னும் இவைமுதலிய வாக்கியங்களால் கீதைமுதலிய நூல்களிற் சொல்லப்படும் இலக்கணமுடையவனைக் குணாதீதனென்றறிக.

றும், * ௬௧. பகவற் பக்தனென்றும், * ௬௨. பிராஹ்மணனென்றும் சாஸ்திரங்கள் முறையிடுகின்றன.

---

* ௬௧. "எவன் எல்லாப் பிராணிகளிடத்திலுந் துவேஷமில்லாதவனாய், மைத்திரிகருணையுள்ளவனாய், யான் எனது என்னும் அகங்கார மமகாரமில்லாதவனாய், எப்பொழுதுஞ் சந்தோஷமுடையவனாய்ச், சொரூப நிச்சயமுடையவனாய்ச், சொரூபத்தை எப்பொழுதுந் தியானிக்கிறவனாய்ச், சத்துருமித்துரு மானாவமானம் சீதோஷ்ணம், சுகதுக்கம், ஸ்துதிநிந்தை முதலிய துவந்துவ(இருமைத்)தருமங்களில் சமசித்தமுடையவனாய், மௌனியாய், ஓரிடத்தில் நியமமாக வாசம்பண்ணாதவனாய்ச், சர்வாத்மாவாகவிருக்கிறபகவானிடத்தில் வாசுதேவன் யானென்கிற திடபக்தியுடையவனாகவிருக்கின்றானோ, அவன் பகவத்பக்தனெனப்படுவான் என்னுமிவைமுதலிய வாக்கியங்களால் பாகவதமுதலிய நூல்களில் சொல்லப்படும் இலக்கணமுடையவனைப் பகவத்பக்தனென்றறிக

* ௬௨. "எவன் அரையிலே கட்டிக்கொள்கிற கோமன், மேலே போட்டுக்கொள்கிற உத்தரீய மிரண்டுமில்லாமல் பாய் முதலான

யாவரும் இந்தத் தத்துவத்தை விசாரஞ் செய்து மோக்ஷமடையக் கடவர்.

## நாநாஜீவவாதக்கட்டளை

## அரும்பதப்பொருள் விளக்கவுரையுடன்

## முற்றிற்று.



தொன்றுமின்றிய வெறுந்தரையிற் றன் கையையே தலையணையாக வைத்துக்கொண்டு சயனம்பண்ணுகிறவனாய்க், குப்பையிற்கிடக்கிற கந்தையினாலே கௌபீனாதியைத் தரித்துக்கொண்டவனாய்ப், பிராரத்த கருமத்தால்வரப்பட்ட பிக்ஷான்னத்தினாற் றேகதாரணம்பண்ணுகிறவனாய்த், தண்டதாரியாய், எப்பொழுதுஞ் சொரூபத்தியானபரனாய், ஏகாங்கியாய்ச், சாந்தமுடையவனாகவிருக்கின்றானோ அவனே பிராஹ்மணனெனப்படுவான்" என்னும் இவை முதலிய வாக்கியங்களால் வாசிட்டாதிநூல்களிற் சொல்லப்பட்டவிலக்கணமுடையவனைப் பிராஹ்மணனென்றறிக.

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 6 | 20 | மின்றிய | மின்றியது |
| 7 | 4 | கித்துரூபசத்தி | சித்துரூபசத்தி |
| 7 | 18 | சுத்தகம | சுத்ததம |
| 16 | 11 | எ-வது | எ௦-வது |
| 16 | 19 | அபஞ்சி | அபஞ்சீ |
| 23 | 4 | சமானவாய | சமானவாயு |
| 24 | 8 | படியால | படியால் |
| 24 | 11 | மாததிரை | மாத்திரை |
| 24 | 13 | இவற்றுள | இவற்றுள் |
| 25 | 7 | [illegible]தான்றன | பிறிதொன்றன் |
| 27 | 9 | சததமூம் | சத்தமூம |
| 38 | 15 | இரணிகர்ப்ப | இரணியகர்ப்ப |
| 39 | 12 | அந்தரயாமி | அந்தரியாமி |
| 51 | 16 | என | என் |
| 52 | 3 | புறப்பட்டு | புறம்புபட்டு |
| 57 | 23 | சித்துரூபனு | சித்துரூபனுக |
| 57 | 23 | வருணாச்சிரங்களில் | வருணாச்சிரமங்களில் |
| 58 | 10 | அதவருணாச்சிரமி | அதிவருணாச்சிரமி |
| 59 | 9 | கொரூப | சொரூப |